யுதாஜித்தென்பவன், நின்னை உடன்கொண்டுசெல்வதற்காகக் காத்திருக்கின்றனன். ஆதலின், நீ இவனோடுசென்று, மூதாதை உள்ளிட்டார்களைக் கண்டு, வணங்கி, சிலநாள் தங்கி, அங்குள்ளோர்களை மகிழ்வித்து வாவென்று கட்டளையிட்டனர். பரதாழ்வானும் தந்தையின் சொற்படி சத்துருக்கநருடன் கூடித் தந்தை தாய் முதலானோரை வணங்கி, விடைபெற்றுக்கொண்டு, யுதாஜித்துடன் புறப்பட்டுக் கேகயநாடுசேர்ந்து, மாதாமகனைக்கண்டு வந்தனஞ்செய்து மகிழ்ந்து வாழ்ந்திருந்தனர்.

பரதாழ்வான், சென்றபின்னர், சக்கரவர்த்தித் திருமகனாரும் இளைய பெருமாளுடன் தந்தைதாயர்களது மனத்துக்கொக்கநடந்து, அவர்களுக்குச் செய்தற்குரிய குற்றேவல் வழுவுதலின்றிப் புரிந்துகொண்டு, தந்தை ஆணையின்படி அரசுத்தொழிலைப் பற்றிய காரியங்களை முற்றும் ஒரு சிறிது குறைவுமின்றி, நடாத்திக்கொண்டும், இடையிடையே தந்தைதாய் குரு முதலிய பெரியோர்களுக்குந் தக்கபடி வழிபாடு செய்துகொண்டும், யாவர்க்கும் அன்பாகவும், நலமாகவும், நடந்து கொண்டும், முறைகெடாமல் ஒழுகினமையால், அந்நாட்டிலுள்ள யாவரும் ஸ்ரீராமபிரானிடத்தில், அன்புகூர்ந்து ஏத்துவார்கள். ஸ்ரீராமபிரான் இவ்வாறு ஒழுக்கம் வழுவாது ஒழுகி, நெடும்புகழ்பெற்று, வாய்மைதோளாண்மையுடையாராய், இசைமடந்தை கொழுநன்போல் எல்லா மன்னுயிர்களுக்கு மினியராகித் தம்மனைவியையன்றிப் பிறரைக் கனவிலும் உள்ளத்திற்கொள்ளாது, தம்மேல் பேரவாப்பூண்ட ஸ்ரீசீதா பிராட்டியாருடன் கூடி, நற்குணமும், நற்செய்கையுமுள்ள இச்சானகியை எனக்கு முதியோர்களன்புகூர்ந்து, மணம்புரிவித்தனர்களேயெனத் தம்முள் வியந்துகொண்டு, பிராட்டியினிடத்தில் வைத்த அன்பை, சீதாதேவியின் நல்லொழுக்கத்தாலும், வடிவழகினாலும், பெரும்பாலும் பெருகச்செய்து, குறிப்புகளினால், தம்மீது ஜானகியாருக்கிருக்கும் காதலைப் பலவாறு கண்டறிந் தாதரஞ்செய்து பிராட்டியாரை மகிழ்வித்தனர். இங்ஙனம் தம் கணவர் செய்யும் ஆதரத்தால், தம் கொழுநர்மேல் தமக்குள்ள காதலை இருமடியாகப் பெருக்கி, இவள் கடவுண் மடவரலோ? உலகினில் அழகென்னும் சொற்பொருளே இப்பெண்ணுருக்கொண்டு வந்ததோ வெனத் தம் கணவனார் தம்மைக் கண்டு காமுறும்படியாகப் பிராட்டியார் விளங்கினர்.

తయాస రాజర్షిసుతోభిరామయా సమేయివానుత్తమరాజకన్యయా
అతీవరామః శుశుభేతికామయా విభుశ్రియా విష్ణురివామరేశ్వరః

தயாஸராஜர்ஷிஸுதேபிராம யாஸமேயிவாநுத்தமராஜகந்யயா
அதீவராமச்சுசுபேதிகாமயா விபுச்ரியாவிஷ்ணுரிவாமரேச்வரꞏ

தசரதசக்கரவர்த்தித் திருமகனாராகிய ஸ்ரீராமபிரானார் ஜனகப்பெருமான் திருமகளாய்த் தம்பால் பெருங்காதல்கொண்ட ஸ்ரீசீதாபிராட்டியாருடன் வீற்றிருந்து, நித்திய முக்தர்களுக்கும், விதி சிவவாசவாதி தொண்டர்களுக்கும் இறைவனாகிய ஸ்ரீமந்நாராயணர் பெரியபிராட்டியாரோடு கூடி, வீற்றிருந்தார்போல விளங்கியருளினார்.

பாலகாண்டத்தில் எழுபத்தேழாவது சருக்கம் முற்றிற்று.

# பாலகாண்டம்

முற்றுப்பெற்றது.

தாரகமந்திரவாச்சியாயநமஃ.



